## படையல்

'பூரண ஞானம் பொழிந்த நன்நாடு,' என்ற பெருமை இந் நாட்டுக்குச் சென்ற காலத்தில் மட்டுமன்றி எக்காலத்துக்கும் உரியது என இக்காலத்து நிலைநாட்டிய அருளாளர் பலர். அவருள், 'தானே முழுதுணரும்' வாய்ப்பை மிக இளமையில் பெற்றவர், அதன்பின் பல ஆண்டுகள் அண்மையில் இருந்தும் கடல் கடந்தும் அறிவிப் பசியோடு வந்தோர்க்குத் தனது முகம் அமர்ந்த இனிய பார்வையாலும், அகம் அமர்ந்த தெளிந்த உரையாலும் அருள் அமுது ஊட்டிய வள்ளல், சாஸ்திர உண்மைகளின் உருவமாக வாழ்ந்தவர், பெருந்தகையாளர் இரமணர் என்ற மாதவருக்கு .

## நூல்

யோக வாசிஷ்டம் சுமார் **32,000** ஸ்லோகங்களைக் கொண்டது. மகரிஷி வசிஷ்டர் இராமருக்கு கூறியதை, முனிவர் வால்மீகி, இராமாயணத்தைப் போல் இதனையும் விரிவாக நூலாக எழுதினார். இது முதலில் சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. இது ஞானத் தேடலுக்கும், முக்திக்கும் வழிகாட்டும் நூல். இளம் வயதுடைய (15) இராமர், மனத்தில் சோர்வும், அமைதியின்மையும் கொண்டு, எதிலும் நம்பிக்கையற்ற நிலையில் இருந்த காலத்தில், இன்ப துன்பம், நன்மை தீமை, தோற்றம் மறைவு என்ற சுழற்சிகளிலிருந்து விடுபட அருள் ஆசானாகிய பிரம்ம ரிஷி வசிஷ்டர் தசரத மன்னனின் சபையில் விஸ்வாமித்திரர், வால்மீகி, வியாசர் போன்ற மகரிஷிகள் அமர்ந்திருந்த இடத்தில் உலகம், மனித மனம், அகங்காரம், அவற்றின் தன்மை, பிறப்பு - இறப்பு இவற்றிலிருந்து விடுபட்டு முக்தி பெறுதல் போன்றவற்றை விளக்கி, ஜீவன்.. முக்தி நிலைகளைப் பற்றி வெகு விரிவாக உரைத்த பாங்கில் இருப்பது ஞானவாசிஷ்டம் அல்லது யோகவாசிஷ்டம் ( இராம கீதை). அதை எளிமை படுத்தி அமைக்கப்பட்டுள்ளது. கனிச்சாறு போன்று அதன் பிழிவாக இருப்பது ஞான வாசிஷ்ட சாரம். அதனை ஓதுவாருக்கு மன அமைதி கிட்டும். ஆழ்ந்து சிந்திப்போர்க்கு ஆன்ம விழுப்பு ஏற்படும். கடைபிடிக்க வல்லார்க்கு பேரின்பம் வாய்க்கும்.

**வசிஷ்டர் சொன்ன அறிவுரைகள்**
**ஆசிரியர் : ஆரார்**

**வடிவமைப்பு : கு . ரவிச்சந்திரன்**

# உட்பொதிவு

## அதிகாரம் ஒன்று

# எது ஞானத் தோட்டம்?



01. அமைதியான சோதிக்கு அது எல்லையற்றது; காலம் இடம் என்ற கட்டுகள் அற்றது; தூய உணர்வு மயமானது. அதை அனுபவித்துத் தான் உணர முடியும்.

02. சத்தியத்தை அறிந்தவனுக்கும், முழுதும் அறியாமையில் ஆழ்த்திருப்பவனுக்கும் இந்நூல் உரியதன்று.

- **'நான் பந்த முற்றவன், எனக்கு விடுதலை வேண்டும்' என்று எவன் எண்ணுகின்றானோ அவனுக்கே இந்நூல் உரியது.**

03. இறைவனுடைய அருளை உறுதியாகப் பெற்றாலன்றி ஒருவருக்கு ஏற்ற குருவோ சரியான சாஸ்திரமோ கிடைப்பதில்லை.

04. ராமா, கைதேர்ந்த படகுக்காரனின் சேவையைக் கொண்டு அலைக்கழிக்காத படகுப் பயணத்தைப் பெறுவது போல மகாத்மாக்களின் கூட்டுறவால் தான் பிறவிப் பெருங்கடலைக் கடக்கும் வழிமுறையை அறிந்து கொள்ள முடியும்.





05. நான் யார்? யாருக்கு இந்தப் பிறப்பிறப்பு உரியன? என்னும் ஆன்ம விசாரமே பிறவிப் பெரும் பிணியைத் தீர்க்க வல்ல அரும் மருந்து ஆகும்.

06. இனிய கனியும் குளிர் நிழலும் தரும் மரத்துக்கு ஒப்பாவார் ஆன்ம ஞானி. அத்தகைய ஞானி இல்லாத இடத்தில் ஒரு நாட்பொழுதையும் கழிக்கக் கூடாது.

07. ஞானிகள் யாதும் உபதேசம் செய்யாவிட்டாலும் அவர்களை அணுகி இருப்பது நல்லது. அவர்களுடைய விளையாட்டுப் பேச்சிலும் மெய்யறிவு பொதிந்திருக்கும்.

08. ஞானிகளின் கூட்டுறவு, வெறுமையைப் போக்கி நிறைவைக் கொணரும்; இறப்பைப் போக்கி இறவா நிலை தரும்; வறுமையைப் போக்கி வளம் நல்கும்.

09. ரகுகுல ராமா, ஞானிகள் தங்களுடைய சுகத்தைப் பற்றி மாத்திரம் கவனித்துக் கொண்டிருந்தார்கள் என்றால் பிறவித் துன்பங்களால் வேதனைப்படுவோர் பின் யாரிடம் சென்று புகலடைவார்கள்?

10. சான்றோனே, காமம், வெகுளி, மதி மயக்க மறுத்தவனாய்த் தகுதியை அடைந்த சீடனுக்கு உபதேசிப்பதே ஞானம் எனப்படும்; தெய்விகமான நூல்களின் நோக்கமும் அதுதான்; அதுவே முழுமையான மெய்யறிவும் ஆகும்.




11. பழமரபினின்றும், வலுவா திருப்பதிற்காகவே வழக்கமான முறையைப் பின்பற்றி உபதேசம் செய்யப்படுகிறது; எனினும் சீடனின் தெளிவைப் பொறுத்தே அவனுக்கு விழுமிய மெய்யுணர்வு புலப்படும்.

12. இராமா, சாஸ்திரங்களின் உதவியாலோ, குருவின் உதவியாலோ (மட்டும்) இறைவனை காண முடியாது; தூய நுண்ணறிவின் உதவியால் தான் 'ஆன்மா' ஆன்மாவை (இறைவனை) காண்கின்றது.




13. கலைஞர்கள், தங்கள் பயிற்சியை நிறுத்தி விட்டால் தத்தம் கலைகளை இழந்து விடுகிறார்கள். ஆனால் ஞானத் தோட்டமோ வெனில் முளை கிளம்பி விட்டால் திடமாக மென்மேலும் வளர்கிறது.

14. கழுத்தில் அணிந்திருக்கும் ஆரத்தை மறதி காரணமாக் காணாமற் போயிற்றென்று கருதிப் பிறகு தன்தவற்றை உணர்ந்து பின் அதனை அடைந்து விடுதல் போல ஒருவன் தன் குருவின் உரைகளால் மயக்க மறுத்துத் தன்னை அடைகிறான்.

15. தன்னை அறியாது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றப் பொருட்களில் மட்டுமே இன்பத்தை நுகர்வோன் துர்பாக்கியசாலி ஆவான். தன் உண்ட உணவு நஞ்சு கலந்ததென்பதை உண்ட நெடுநேரங்கழித்து உணர்பவனைப் போலாவான் அவன்.

16. உலகிற் காணப்படும் பொருள்கள் தன்னை ஏமாற்றி மயக்கத்தை உண்டு பண்ணுகின்றன என அறிந்திருந்தும் மீண்டும் மீண்டும் அவற்றையே நாடுபவன் மனிதனல்லன்; மூடனாவான்.



17. மிகமிகச் சிறிய எண்ணமும் மனிதனை துயரத்தில் அமிழ்த்துகிறது; எல்லா எண்ணங்களும் அற்ற நிலையில் மனிதன் அழிவற்ற ஆனந்தம் அனுபவிக்கிறான்.

18. இரண்டரைய் நாழிகை (ஒரு மணி நேரம்) கனவில் நாம் ஒரு நூறு ஆண்டுகளைக் கழிப்பது போன்று தோன்றுகிறது. நமது விழுப்பு நிலையிலும் அவ்வாறே மாயையின் விளையாட்டில் சிக்கி தவித்து கொண்டு இருக்கின்றோம்.

19. யார் ஒருவருடைய மனம் அமைதியுற்றிருக்கிறதோ விருப்பு வெறுப்பற்று இருக்கிறதோ, யார் இவ்வுலகை வெறும் பார்வையாளன் போல் மதிக்கிறானோ அவன் மகிழ்ச்சியோடிருப்பான்.



20. இராகவா, வேண்டுதல் வேண்டாமை என்னும் இருவகை முனைப்புகளையும் எப்படிக் களைவதென்பதை யார் நன்கு அறிந்துள்ளாறோ, யார் தனது அந்தரங்கத்தில் இருக்கும் உணர்வை அறிந்துள்ளா றோ, அவனுடைய வாழ்வு புகழ்படைத்தாகும்.

21. உடல் அழியும் போது ஆன்மா அழிந்து போனதாக எண்ணி மனிதர்கள் தேவையில்லாமல் வருந்துகிறார்கள்; இருதயத்தினால் கட்டுப்படுத்தப்பட்ட ஆகாயம் முடிவு பெறுகிறதே யொழிய வேறொன்றுமில்லை.

22. குடங்கள் உடைந்தால் அவற்றினுள் இருக்கும் ஆகாசம் எல்லையற்ற ஆகாசமாகிறது; அதுபோல உடல்கள் அழிந்தால் ஆன்மா நித்தியமாகச் சார்பற்று நிற்கிறது.

23. இராமா, எக்காலத்திலும் எங்கும் எதுவும், பிறப்பது மில்லை, இறப்பது மில்லை. பிரம்மம்... ஒன்றே உலகு என்ற மாயையாக நமக்குத் தோற்ற மளிக்கிறது.



24. ஆன்மா, நாம் காணும் வெட்ட வெளியினும் பரந்தது, அது பரவெளி; அது தூயது, நுண்ணியது, அழிவற்றது, நன்மை அளிப்பது. இத்தகைய பொருள் எப்படிப் பிறக்கக் கூடும்? இறக்கக் கூடும்?.

25. அது (ஆன்மா) சாந்தமயமானது, முதல் நடு இறுதியற்றது. அது உள்ளதென்றோ இல்லாதென்றோ கூறமுடியாது. இதனை அறிந்து கொண்டு மகிழ்ச்சியாக இரு.

26. இராமா,.. அறியாமையில் அமிழ்ந்து வாழும் வாழ்வைக் காட்டிலும் கையில் மண்சட்டி ஏந்தியவனாய் தாழ்ந்தோரின் தெருவில் யாசகம் எடுத்து அலைவது எவ்வளவோ மேலானதாகும்.





27. இவ்வுலகில் நோய், நஞ்சு, வறுமை போன்ற எதுவும், உடம்பிடைப் பிறந்த மடமையைப் போன்று மனிதனுக்குத் துன்பம் தருவது கிடையாது.

# அதிகாரம் இரண்டு

## உலகின் உண்மை நிலை என்ன?

01. திருப்பாற் கடலைக் கடைந்த காலத்தில் மகேந்திர மலை அசைவற்று நிலையாக நின்ற போது அக்கடல் அலைகளின்றி அமைதியாக இருந்தது. அது போல, மனமும் தன்பால் ஓட்டங்கள் நீங்கி அமைதியுறுமாகில் உலக பந்தம் என்ற மாயையும் மாயும்.

02. மனம் இயங்குகையில் உலக பந்தம் ஏற்படுகிறது; மனம் இயங்காமல் அமைதியுறுகையில் உலக பந்தம் நின்று விடுகிறது. மூச்சை அடக்குவதன் மூலமாகவும் உள்ளடங்கிய ஆசைகளை அடக்குவதன் வாயிலாகவும் மனத்தை அமைதிப் படுத்துவாயாக.





03. பயனிலா உலக பந்தம் வெறும் கற்பனையில் பிறக்கிறது; கற்பனை மறைந்தால் அதுவும் மறைகிறது. உலக பந்தம் முழுவதும் பொய் என்பது உறுதி.

04. நாகத்தின் சித்திரத்தை ஒருவன் காண்கிறான். அது சித்திரம் என்பது உறுதிப் படும் பொழுது, அவன் மனத்தில் அது உயிருள்ள நாகம் என்ற எண்ணம் தலையெடுக்காது. அதே போன்று கண்களுக்குத் தென்பட்டுக் கொண்டிருந்தாலும் ஞானம் உதிக்கும் பொழுது உலக பந்தம் நீங்கி விடுகிறது.




05. 'நெடிது தின்று' துன்புறுத்தும் வேதாளம் போன்றது உலக பந்தம். அது மயக்கத்துக் குள்ளான மனத்தின் படைப்பாகும்; இன்னல்களுக்கும் அதுவே காரணம். அது பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்தால் அந்த உலக பந்தம் மறைந்து விடுகிறது.

06. இராமா, மாயை தன்னைத் அழித்துக் கொள்ளும் பொழுது மகிழ்ச்சியைத் தருகிறது; இதுவே அதன் தன்மை, அதனுடைய இயல்புகள் அனைத்தையும் அறிய முடியாது. அதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கையில் அது தன் இருப்பு அழிந்து விடுகிறது.

07. அருமருந்த இளையோய், உலகோர் அனைவரையும் மயங்க வைக்கின்ற இந்த மாயை என்பது உண்மையிலே ஆச்சரியமானது. ஆன்மா நமது உடல் முழுதும் ஊடுருவிப் பரந்து விரிந்துருந்தும் கூட மாயையின் ஆற்றல் காரணமாக நாம் அதை (ஆன்மாவை) க் காண முடிவதில்லை.





08. நாம் பார்ப்பது அனைத்தும் உண்மையில் இல்லாதது; 'கந்தர்வர்களின் மாயா நகரம் போன்றது; கானல் நீர் போன்றது.

09. நமக்கு உள்ளேயிருந்தும் எது நமக்கு வெளிப்படையாகப் புலனாகாதிருக்கிறதோ, அதுவே, நித்தியமான - அழிக்க வொண்ணா - ஆன்மா எனப்படுகிறது.

10. குளக்கரையில் இருக்கின்ற மரங்களின் நிழல் குளத்து நீரில் தோன்றுகின்றது. பல வேறு வகைப் பொருள்களும் உணர்வு வடிவமான நமது ஆன்மப் பெரும் பரப்பாகிய கண்ணாடியில் நிழல்களாகத் தோன்றுகின்றன.





11. நாம் காணும் இந்தப் படைப்பு ஆன்மாவாகிய உணர்வின் ஒரு விளையாட்டு ஆகும். நாம் அறியாமையில் மூழ்கி யிருக்கும் போது பாம்பாகத் தோற்றம் அளிக்கும் கயிறு போன்றது அது. மெய்யறிவு உதிக்கும் பொழுது அது அழிந்து விடுகிறது.

12. கடலிலிருந்து அலைகள் கிளம்புவதைப்போல நிலைபேறுள்ளதும் பெரும் பரப்புடையதுமான பரம்பொருளாம் ஆன்மாவிலிருந்தே நிலையற்ற மனம் கிளம்புகிறது.

13. ராமா, *உண்மையில் பந்தம் என்பது கிடையாது. எனினும், இன்பப் பொருள்களின் மீது ஆசை ஏற்படும் போது அது வலுவடைகிறது . இந்த ஆசை குறையும் போது பந்தம் வலுக் குறைகிறது.





14. மனமானது, தன்னிச்சையாகவே திடீர்த் திடீரென எப்பொழுதும் எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி எல்லாவற்றையும் கற்பனை செய்கிறது. நாம் விழிப்பு நிலையில் இருக்கும் போது இந்த மாய உலகமும் அதே பாங்கில் அதனால் தோற்றுவிக்கப் படுகிறது.

15. இந்த உலகு இல்பொருள். (இல்லாத ஒன்றை இருப்பது போல் கற்பனை செய்வது) எனினும், இருப்பது போலக் காணப்படுகிறது. இல்பொருளாகிய வேதாளம் எவ்வாறு ஒரு சிறுவனை அச்சுறுத்துகிறதோ அவ்வாறு இல்பொருளாகிய இவ்வுலகம் அறியாமையில் அமிழ்ந்து கிடந்து தத்தளிக்கும் மனிதனுக்கு வாழ்நாள் முழுதும் தொலையாத துன்பத்தைத் தருகிறது.

16. பொன் என்றால் என்ன வென்று தெரியாதவன் அணிகலனை மாத்திரம் பார்க்கிறான். அது வெறும் பொன்னே என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றுவதில்லை.





17. அதே போன்று நாடு நகரங்கள் வீடுகள் மலைகள் உயிரினங்கள் போன்றவை, அறியாமைக்கு உள்ளானவன் கண்ணுக்குத் தனித்தனியாக காட்சி அளிக்கின்றன. இருக்கும் பொருள் ஒன்றே என்று தெள்ளத் தெளிந்தார்க்குக் காணப்படும் உலகமும் காண்பானும் வெவ்வேறு அல்ல; ஒன்றே ஆகும். உலகம் ஆன்மாவினின்றும் வேறுபட்ட தன்று.

18. இராகவா, அறியாமை வயப்பட்டவனுக்கு இவ்வுலகம் துன்பம் நிறைந்ததாகவும் ஞானிகளுக்கு ஆனந்தமயமாகவும் இருக்கிறது: குருடனுக்கு இருட்டாகவும் கண்தெரிந்தவனுக்கு ஒளியாகவும் இருக்கிறது இவ்வுலகம்.

19. எது உள்ளது எது இல்லாதது என்பதைத் தெளிந்து, உலக பந்தங்களை உதறித் தள்ளி விட்டு மனத்தின் கற்பிதங்களை ஒதுக்கியவனுக்கு இன்பம் இடையருது மிகும்.





20. சூரியன் வேறு அவனுடைய கதிர்கள் வேறு என்று எண்ணாமல் கதிர்களும் சூரியனே என்று உணருகிறவன் பேதங் கடந்தவன் எனப்படுகிறான் .

21. இராகவா, தெளிவாக இருக்கிற வான வெளியில் திடீரென்று தோன்றி திடீரென்று மறைந்து விடுகிற மேகங்களைப் போன்று ஆன்மாவின் கண் பிரபஞ்ச முழுவதும் தோன்றி மறைகிறது.





22. ஆராயும் போது துணி, நூலினின்றும் வேறுபடாதது போல் ஆழ்ந்தது சிந்திக்கும் போது இந்த உலகமும் ஆன்மாவினின்று வேறுபடாததாக உள்ளது.

23. அமுதக் கடலாகிய ஆன்ம உணர்வினின்றும் ஓர் அலை போல கவர்ச்சியுள்ள இந்த உலகம் எழுகிறது. அதிலே கரைந்து விடுகிறது அவ்வாறிருக்கையில் இடை நடுவே காணப்படும் இந்த உலகம் எப்படி அதனின்றும் வேறுபட்டதாக இருக்கக் கூடும்?

24. அலைகள், நுரை, பனி, குமிழிகள், யாவும் நீரினின்றும் வேறானவை அல்ல; அவ்வாறே இந்த உலகமும் ஆன்மாவினின்று வெளிக்கிளம்பியதால் அதனின்றும் வேறுபட்டது அன்று.

25. பழங்கள் இலைகள் கொடிகள் மலர்கள் குச்சிகள் வேர்கள் என்ற இவை யாவும் மரத்தின் விதைக்குள் அடங்கி யிருப்பதைப் போல இங்கு வெளிப்பட்டுத் தோன்றும் உலகமும் பிரம்மத்தில் அடங்கி யிருக்கிறது.

26. மண்சட்டி இறுதியில் மண்ணுக்கே மறுபடியும் போய்ச் சேருவது போல, அலைகள் நீராகவும், அணிகலன்கள் தங்கமாகவும் பழைய சொந்த நிலைக்கு மீளுவது போல, ஆன்மாவிலிருந்து வெளிப்பட்ட உலகமும் மீண்டும் ஆன்மாவுக்கே திரும்பிச் செல்கிறது.



27. கயிற்றைக் காணாத போது மனிதன், பாம்பை (அதில்) காண்கிறான். கயிற்றைக் காணும் போது பாம்பு மறைந்து விடுகிறது. அதே போல, ஆன்மாவைக் காணாத போது உலகம் தென்படுகிறது. ஆன்மாவைக் காணுகையில் உலகம் மறைந்து விடுகிறது.

28. கயிற்றை அறியாத போது பாம்பு காணப்படுவது போல, கண்ணுக்குப் புலப்படாத ஆன்மாவை நாம் மறந்து விடுவதால் அம்மறதி உலகம் தோன்றுவதற்கு ஏதுவாகிறது.

29. விழிப்பு நிலையில் கனவு பொய்யாகிறது, கனவு நிலையில் விழிப்பு நிலை பொய்யாகிறது? அது போல, வாழ்வு நிலையில் இறப்பும் பொய்யாகும், இறப்பு நிலையில் பிறப்பும் பொய்யாகவும் ஆகின்றன .



30. இவ்வாறு இருத்தலின் இவை யாவும் மெய்யும்மல்ல பொய்யும்மல்ல. இவை மயக்கத்தின் விளைவுகள் பழைய அனுபவங்களை ஒட்டி எழுந்த மனப் பதிவுகள்.

# அதிகாரம் மூன்று

## ஜீவன் முக்தர் யார்?

01. ஆசை என்னும் உலர்ந்த புல்லை எரிக்கும் தீயானது ஆன்ம ஞானம் ஆகும். இது தான் உண்மையான சமாதி எனப்படுமே தவிர வெறுமனே வாய்மூடி மௌனியாக இருப்பது சமாதி எனப்படுவதில்லை.

02. பிரபஞ்சம் முழுதும் உணர்வே தவிர வேறொன்றுமில்லை என்பதை அறிந்து எவன் மிக அமைதியாக இருக்கிறானோ அவனைப் பிரம்மம் என்ற கவசம் காக்கிறது. அவன் மகிழ்ச்சியோடு இருக்கிறான்.





03. இராகவா, எவன் எல்லாவற்றையும் கடந்த நிலையை எய்தி முழுமதி போல் எக்காலமும் குளிர்ச்சியாக இருக்கிறானோ அவனே மகா தேவன்.

04. ராமா, பிரம்மத்தைப் பற்றி உபநிடதங்கள் இயம்புவதை எவன் தன் உள்ளார்ந்த தூய மனத்தில் மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்க்க வல்லவனாக, இன்ப துன்பங்களில் பாதிக்கப் படாதவனாக இருக்கிறானோ, அவன் உலக பந்தங்களால் வேதனைப்படுவதில்லை.



05. தீப்பற்றி எரிகின்ற மலையில் பறவைகளும் மிருகங்களும் தங்க மாட்டா; அது போல, தீய எண்ணங்கள் ஆன்ம ஞானியிடம் தோன்றுவதில்லை.

06. ராமா, இவர்கள் எவ்வளவு தூரம் பிறருடைய கோபத்தால் பாதிக்கப்படுகிறார்கள்? கோபம் மூட்டப்பட்டால் தங்களுடைய உணர்ச்சிகளை இவர்களால் அடக்க முடிகிறதா? - என்றெல்லாம் சோதித்துப் (சுயமாக) பார்ப்பதற்காகவே அறிவாளிகளும் அறிவற்றவர்களைப் போலச் சிற்சில சமயங்களில் பிறரைக் கோபித்துக் கொள்ளுகிறார்கள்.

07. பாம்பைக் காண்பதாக நினைக்கிற ஒருவனுக்கு உடம்பெல்லாம் நடுங்குகிறது; உண்மையில் அது பாம்பில்லை என்பதை அறிந்த பிறகும் கொஞ்ச நேரத்துக்கு நடுக்கம் இருந்து கொண்டிருக்கிறது. அதுபோல, மயக்கங்கள் அனைத்தையும் ஒழித்த பிறகும் மயக்கங்களின் முன்னைய தாக்கம் சிறிது காலம் விடாது நிற்கும்,

08. கண்ணாடியின் மீது படும் நிழல்களால் அக் கண்ணாடி கறைபடாதது போல, மெய்ப்பொருளை உணர்ந்தவன் தனது செயல்களின் விளைவுகளால் பாதிக்கப்படுவதில்லை.




09. புறத்தே தான் செய்யும் செயல்களில் ஈடுபாடு காட்டினாலும் மெய்ப்பொருளை உணர்ந்தவன் எக்காலத்தும் உறக்கத்தில் ஆழ்ந்தவனைப் போல் மிகமிக அமைதியும் உள்முக (உணர்ச்சிக்கும் புறநிலை உணர்ச்சிகளுக்கும் இடைப்பட்டவர்) நோக்கமும் கொண்டவனாக இருக்கிறான்.

10. யோகிகள், இருப்பது ஒன்றே என்ற அத்வைதப் பாங்கில் (ஆன்மாவும் இறைவனும் இரண்டல்ல, ஒன்றே என கூறும் கொள்கை) உறுதி பூண்டவராகவும், முழுக்க முழுக்க மன அமைதியை எய்தியவராகவும் தங்கள் பணிகளை மேற் கொள்ளுகிறார்கள். இவ் வுலகைக் கனவாகக் கருதிக் கடமை ஆற்றுகிறார்கள்.

11. மெய்ப் பொருளை உணர்ந்தவனுக்குச்,

சாவு இன்றே வருக, அஃது ஊழி பல கழித்து நின்றே வருக;

என எங்கன மாயினும் அவன், சேற்றிற் புதைந்து கிடந்த பொன் போன்று மாசு மறுவற்றிருக்கிறான்.

12. அவன் தன் உடலைக் காசியில் உகுக்கலாம், அல்லது நாயைத் தின்றுழலும் புலையன் வீட்டில் உகுக்கலாம். பற்றுற்றவனாகிய அவன் ஞானத்தை எய்திய அக் கணத்திலேயே ஜீவன் முத்தனாகிறான்

13. இராமா, பற்றற்றவனுக்கு இவ்வுலகம் மண்ணில் பசுவின் கால்குளம்பு பதிந்த தடம் போன்றது; அவனுக்கு மேருமலை ஒரு சாதாரண மேடு; வெட்டவெளி ஒரு சிறு பெட்டியின் உள்ளிடம்; மூன்று உலகங்களும் ஒரு புல்லின் தோகை.

14. மெய்ப்பொருள் உணர்ந்தவன், உள்ளே ஒன்றும் மில்லாத வெறும் பானையைப் போன்று உள்ளும் புறமும் வெறுமையாக இருக்கிறான்; அதே சமயத்தில் கடலில் மூழ்கியிருக்கும் பானையைப் போன்று உள்ளும் புறமும் நிறைத்தும் இருக்கிருன்.

- புறப்பொருட் சார்பாகிய பதிவுகளும், கருத்தமைதிகளும் இல்லாமையால் வெறுமையோடு இருக்கிறான்; மெய்யுணர்வு நிலைமையால் உள்ளும் புறமும் நிறைந்திருக்கிறான் என்பதாம்.



15. இராமா, எவன் தான் காணும் பொருள்களைத் தனக்கு வேண்டுமென்பதும், வேண்டாமென்பதும் அற்றவனாக இருக்கிறானோ, எவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பவனைப் போல் நடந்து கொள்கிருனோ, அவன் முக்தன் எனப்படுகிறான்.



16. எவன் ஆசைகள் எனப்படும் முடிச்சுகள் நீங்கி யுள்ளானோ, எவனுடைய ஐயப்பாடுகள் அனைத்தும் தீர்ந்துவிட்டனவோ, அவன் உடல் வாழ்க்கை கொண்டுள்ள போதே முக்தனாவான். பந்தப் பட்டவன் போன்று காணப்படினும் அவன் பந்தத்திலிருந்து விடு பெற்றவன்; ஓவியமாக வரையப்பட்ட விளக்கென நிலவுகிறான் அவன்.

17. இராகவா, எவன், யான் எனது என்னும் எண்ணங்களையும் அவற்றினின்று முளைவிடும் எண்ணங்களையும் விளையாட்டுப்போல வெகு இலேசாக நீக்கிவிட்டானோ, எவன், தனது தியானப் பொருளையும் கூடப் போக்கிவிட்டானோ அவன் உடல் பெற்றுள்ளபோதே முக்தன் எனப்படுகிறான்.

18. எவன், குருடனைப் போலத் தன் உறவினரைக் கண்டும் காணமாட்டாதவனாக இருக்கிருனோ, எவன் பாம்பைக் கண்டு அஞ்சுவது போலப் பந்தங்களைக் கண்டு அஞ்சுகிறானோ, எவன் புலனுகர்ச்சி தரும் போகப் பொருள்களை நோய்யென நோக்குகிறானோ, எவன் பெண்களின் கூட்டுறவைப் புல்லின் தோகையைப் போல் துச்சமாக எண்ணுகிறானோ, எவன் பகை, நட்பு என்ற பாகுபாட்டினின்றும் முற்றும் நீங்கி விட்டானோ, அவன் இம்மையிலும் சரி மறுமையிலும் சரி மகிழ்ச்சி யுறுகிறான் .



19. தன் மனத்தினின்று எவன் புலனுகர்ச்சி சுகம் தரும் எல்லாப் பொருள்கலும் வெறும் மாயை என வெளியேற்றுகிறானோ, முழு அமைதி அடையப் பெற்றவனாகி எவன் வெட்ட வெளியைப் போன்று அசைவின்றி இருக்கின்றானோ துயரத்தால் எவன் பாதிக்கப் படா திருக்கின்றானோ அவனே முக்தன்; அவனே மா தேவன்.

20. எவனுடைய இதய ஆசைகள் முடிவுக்கு வந்து விட்டனவோ, அந்த மேலோன் விடுதலைப் பெற்றவன்; அவன், தியானம் செய்கிறானா இல்லையா, கருமங்கள் செய்கிறானா இல்லையா என்பவை ஒரு பொருட்டாகா.



21. பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளுதல் பந்தம். பொருளல்லவற்றைக் கைவிடுதல் முக்தி. எக்காலத்தும் சுதந்திரமாக இருப்பது ஆன்மா; அதற்குப் பந்தமும் இல்லை, முக்தியும்இல்லை.

22. புலன்நுகர்ச்சிப் பொருள்கள் என்பன உண்மையில் இல்லை என்பதைப் புரிந்து கொண்டு மனமானது, அப் பொருள்களினின்றும் முற்றிலும் விடுபடுமானால் அங்கே அப்பொழுதே முக்திப் பேரின்பம் கைகூடுகிறது .

23. இராமா, பூர்வ வாசனைகள் (மறைந்துறை பதிவுகள்) அனைத்தையும் அறவே கைவிடுவதே உண்மையான முக்தி என்பது சான்றோர் கருத்து. அதுவே முக்தி எய்துவதற்குரிய மாசிலா நெறியாகும்.



24. முக்தியென்பது வானத்தின் மறுபக்கத்தில் இல்லை; பாதாளத்திலும் இல்லை. ஆசைகள் எல்லாவற்றையும் வேரோடும் களைந்தொழிப்பதன் மூலமாக மனத்தை நாசம் (தூய்மை) செய்வது முக்தியெனக் கருதப்படுகிறது.

25. இராமா, அறிவு என்பது இல்லை, அறியாமை என்பதும் இல்லை; மனம் என்பது இல்லை, ஜீவன் என்பதும் இல்லை. இவை யாவும் பிரம்மத்தில் தோன்றும் கற்பனைகளே.

26. எல்லையில்லாத தூய உணர்விலும், ஆனந்தத்திலும் வரம்பற்ற அத்வைதத்திலும் நிலை பெற்று நிற்பவனுக்கு உள்ளதாக இருப்பது ஒன்று தான்; இரண்டாவ தென்பதே கிடையாது. அப்படியிருக்கும்போது அவனுக்குப் பந்தம் ஏது? விடுதலை ஏது?



27. இராமா, மனம் தன் செயலாலே தன்னைப் பந்தப்படுத்துக் கொள்கிறது; அது அமைதியுறும் பொழுது விடுதலை பெறுகிறது.

## அதிகாரம் நான்கு

## மனமாவது அழிவதாவது?

01. உணர்வு என்பது பிரிவுகளற்றதாய், ஒட்டு மொத்தமாக - ஒரே பொருளாக - உள்ளது அது தனக்கு விருப்பமான பொருள்களைக் கற்பணை செய்து கொண்டு அவற்றை நாடி அலைகிறது. அப்போது அது மனம் எனப்படுகிறது.

02. இராகவா, நீரினின்று சிறு அலைகள் கிளம்புவது போல, எங்கும் நிறைந்த - எல்லாம் வல்ல சர்வேசுவரனிடம் இருந்து தனித்தனிப் பொருள்களைக் கற்பிதம் செய்யும் அற்றல் வெளிப்படுகிறது.



03. இராமா, காற்றிலிருந்து பிறக்கும் நெருப்பு அதே காற்றினல் அணைவதைப் போல, கற்பனையில் பிறந்தது கற்பனையால் அழிகிறது .

04. மறதியால் கற்பனை தோன்றுகிறது; கற்பனையால் மனம் உதிக்கிறது. தான் இறந்ததாகக் கனவு கண்டவன் உண்மையில் இறவாதது போல ஆராய்ந்து பார்த்தல் இந்த மனமும் தன் இருப்பு அழிந்து விடுகிறது.

05. பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளும் செயல், தவறாகப் புரிந்து கொள்ளலின் காரணமாக ஏற்படுகிறது. இராமா, எது பொய்யை மெய் யென்று கொள்கிறதோ அதுவே மனம் என அறிவாயாக.

06. 'இது அவன்' , 'இது நான்', "அது என்னுடையது', என்பனவாகிய எண்ணங்களே மனம். அந்தத் தவறான கருத்துக்களைச் சிந்தித்துப் பார்த்தால் மனம் மறைந்து விடுகிறது.

07. சிலவற்றை வேண்டுமென்பதும் சிலவற்றை வேண்டாமென்பதும் மனத்தின் இயல்பு. இதுவே பந்தம், வேறில்லை.

08. இராகவா, இந்த மனம் தான் உலகத்தைப் படைக்கிறது. மனம் தான் மனிதன். மனத்தினால் செய்யப்பட்டதுவே செயலாகக் கருதப்படுகிறதே தவிர உடலினால் செய்யப்பட்டது அல்ல. மனைவியைக் கட்டித் தழுவுகிற அதே கைகள் மகளையும் கட்டித் தழுவுகின்றன:

- இங்கு உடம்பின் செயல் ஒன்றே; ஆனால் மனத்தின் நிலை வேறு.

09. புறத்தே காணப்படும் பொருள்களை மனம் படைக்கிறது. மூன்று உலகங்களும் நம்முடைய மனத்தில் இருக்கின்றன. மனம் மறையும் போது உலகமும் மறைகிறது. முயன்று முயன்று மனத்தைத் தூய்யதாக்க வேண்டும்.

10. இராமா, மனமானது மறைந்துள்ள பதிவுகளால் கட்டுப்பட்டிருக்கிறது. பதிவுகளற்ற போது விட்டு விடுதலையாகிறது. ஆகையால் விவேகத்தினால், பதிவுகளற்ற நிலையை விரைவில் உண்டாக்கிக் கொள்.

11. ஒரு சிறு மேகம் நிலவைக் களங்கப் படுத்துவது போல, வெள்ளை பூசிய மதிற்ச் சுவரைய் சிறிதளவு கருமை களங்கப்படுத்துவது போல, ஆசையெனும் கொடிய நோய் அந்தரங்க மனிதனைக் களங்கப் படுத்துகிறது .




12. இராமா, எவனொருவன் தன் மனத்தை உள்முகமாகத் திருப்பி, மூன்று உலகங்களையும் உலர்ந்த புல்லெனக் கருதி ஞானம் என்ற நெருப்பில் ஆகுதி (யாகத்தில் வளர்க்கும் தீயில் இடப்படும் பொருள்) செய்கிறானோ, அவன், மனத்தின் மயக்கங்களில் இருந்து விடுபடுகிறான்.

13. வேண்டுதல் வேண்டாமை என்பவற்றின் உண்மைப்பொருள் என்ன என்பதை நன்கு அறிந்தவனாய், வேறொன்றிலும் மனத்தைச் செலுத்தாமல், தன்னில் தானாக நிலைப்பவனுக்கு மனம் என்பதொன்று உண்டாவதில்லை .

14. விழிப்பு நிலையில் மனம் பயங்கரமாக இருக்கிறது, கனவு நிலையில் சாந்தமாக இருக்கிறது, ஆழ்ந்த உறக்கத்தில் மந்தமாக இருக்கிறது. இம்மூன்று நிலைகளையும் கடந்த நிலையில் அதுவும், மனமும் இறந்து விடுகிறது.

15. கடகவிதை (தேற்றாங்கொட்டை) யின் தூள், கலங்கலாக உள்ள நீரைத் தெளியச் செய்த பின்னர் தானும் நீரில் கலந்து விடுவது போல, நம் மனமும் தன்பால் பொதிந்த பதிவுகளைக் களைந்த பிறகு ஆன்மாவில் கலந்து விடுகிறது.

16. மனமே உலக பந்தம்; மனம் தான் தளை (பிணைப்பு) எனவும் சொல்லப்படுகிறது. காற்று மரத்தை ஆட்டி வைப்பது போல மனம் உடலை ஆட்டி வைக்கிறது.

17. இராமா, கையோடு கையைப் பிசைந்து பல்லோடு பல்லை இறுக்கிக் கை கால்களை முறுக்கி உறுதிகொண்டு உன் மனத்தை வெல்லு . அதுவே, நீ முதலில் செய்ய வேண்டுவது .





18. மனத்தை வெல்ல மாட்டாதவனாய் அதன் தன் போக்கிலேயே போய்ச் சுற்றித்திரிந்து, தியானத்தைப் பற்றிக் ஒழுங்கின்றி பேசி அலைகிறானே, அந்த ஆதனுக்கு (அறிவில்லாதவன்) வெட்கம் என்பதில்லையா ?

19. இராமா, நாம் வெல்ல வேண்டிய ஒரே தேவதை மனம் தான். அந்த வெற்றி எல்லாவற்றையும் அளிக்க வல்லது. இராமா, மனத்தை வெற்றி கொள்ளாமல் செய்யப்படும் பிற முயற்சிகள் யாவும் பயனற்றவை.





20. தெய்வானுகூலம் பெற்ற வாழ்வின் அடிப்படையாக அமைந்திருப்பது கலங்காத மனம் உடைமை, அதன் மூலம் முத்தி அடையலாம். மனத்தை வெல்லாத நிலையில் மூன்று உலகங்களை வென்றாலும் அது ஒரு புல்லின் தாள்போல் துச்சமாகும்.

21. நல்லோர் இணக்கம், விடாது இணைந்துள்ள பதிவுகளை அப்பாற்படுத்துதல், தன்னைப் பற்றிய ஆராய்வு, மூச்சைக் கட்டுப்படுத்துதல் – ஆகியவை மனத்தை வெல்லும் உபாயங்களாகும்.





22. இராகவா, கால்களுக்குத் தோலாலான பாதணி (செருப்பு) அணித்திருப்பவனுக்கு நிலம் எங்குமே தோலால் மூடிவைத்திருப்பது போன்ற நிலைமை தான்; அதுபோன்று துண்டுபடாமல் நிறைவாக இருக்கும் மனத்திற்கு இவ்வுலகம் அமுத மயமாகப் பொங்கி வழிகிறது.

23. நான் பிரம்மம் இல்லை என்று நினைக்கும் மனம் தளைப்படுகிறது (மிருக குணம்); நான் பிரம்மம் என்று எண்ணுவதால் அது முற்றும் விடுதலை பெறுகிறது .

24. இராமா, மனம் அற்ற நிலையில் இருமையும் இல்லை, ஒருமையும் இல்லை. அப்போது துன்பங்களினின்று நீங்கிய -- நித்தியமான -- அமைதி நிறைந்த -- வான்பொருளாகிய பிரம்மமே எஞ்சியுள்ளது .



25. தூய மனத்தை எய்தியவன், தூய உணர்வு நிலையை எய்துகிருன்; மனிதன் மரணத்தை வெல்லுகிறான். அவன் அடைகின்ற உயரிய ஆனந்தத்துக்கு ஈடாக எதுவுமே இல்லை.

## அதிகாரம் ஐந்து

# மறைந்துறை பதிவுகளைத் தொலைப்பது எப்படி?

01. இராமா, ஆன்மாவின் தன்மையை ஆராய்தல் அல்லது "நான் யார்? எதற்க்கு இந்த பிறப்பு?" என்பதை ஆராய்தலாகிய செயல், மனம் எனும் கொடிய மரத்தின் விதைகளை எரிக்கும் நெருப்பு ஆகும்.

02. மதிற்ச் சுவற்றில் வரையப்பட்ட கொடிகள் காற்றினால் பாதிக்கப்படாதது போல, தெளிந்த அறிவில் உறுதியாக நிலை பெற்றோரையும் மீண்டும் மீண்டும் ஆராய்ததில் ஈடுபடுவோரையும் துன்பங்கள் பாதிப்பதில்லை.



03. தன்னைப் பற்றிய உண்மையினை ஆராய்வதே 'மெய்ஞானம்' என ஞானிகள் பகருகின்றனர். பாலின் இன்சுவை பாலில் அடங்கியிருப்பதுபோல், எது அறிய வேண்டுவதோ அது, அதிலேயே (ஆன்ம ஞானத்திலேயே) அடங்கியிருக்கிறது.

04. இராகவா, தன்னை உணர்ந்தவனுக்குப் பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகியோர் இரங்குதற்குரியவர்.



05. 'பரந்த இந்தப் பிரபஞ்சம் என்பது யாது?' "நான் யார்?" என்ற கேள்விகளை இடையூறாது கேட்பதில் விருப்பமுள்ளவனுக்கு இவ்வுலகம் முற்றும் பொய்யாகிறது.

06. இது கானல் நீர் எனத் தெளித்தவனுக்கு அங்கே நீர் தோன்றாதது போல, எங்கே பிரம்மம் எனத்தெளிந்து, அறியாமையை அழித்தவனுக்கு மறைந்துறையும் பதிவுகள் (அஞ்ஞானம்) தலை காட்ட மாட்டா.

07. இராமா, மறைந்துறை பதிவுகளைத் (அஞ்ஞானம்) தொலைப்பதன் மூலமாகவோ, மூச்சைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவோ மனம் தனது நிலை அழிகிறது. அதற்கு உனக்கு விருப்பமான உபாயத்தை மேற்கொள்.




08. தூயவனே, முனிவர்களுடன் கூடி வாழ், உண்மையான ஞான நூல்களை ஓதுவாயாக, நீ பேருணர்வினன் ஆவாய். அந்நிலையை எய்துதற்கு மாதங்கள் ஆகா, நாட்களே ஆகும்.

09. ஞானிகளுடன் வாழும் போதும், உலக பந்தங்களான எண்ணங்களைத் துறக்கும் போதும், உடல் மறையக்கூடியது என்பதை நினைவு கொள்ளும் போதும், மறைந்துறையும் பதிவுகள் (அஞ்ஞானம்) தம் செயலிழக்கின்றன.

10. இராகவனே, அறிவிலிகளும் கூட உறுதியான நம்பிக்கையினால் நஞ்சை அமுதமாகவும், அமுதை நஞ்சாகவும் மாற்றுகிறார்கள்.




11. இராமா, மெத்தையில் படுத்து உறங்கும் போது கனவுடலோடு எல்லாத் திசைகளிலும் சுற்றி அலைகிறாய். இப்போது விழிப்பு நிலையில் எங்கே அந்த உடல்?

12. இவ்வுடம்பை மெய்யென்று கருதும் போது அது உடம்பாலாகிய பயனைத் தருகிறது. அது பொய்யென்று கருதும்போது அது வெட்டவெளியாகிறது.

13. இழிஞன் (புலையன்) ஒருவன் நாயின் இறைச்சியைக் கொண்டு செல்கையில் மேன்மகன் ஒருவன் நெடுந்தூரம் விலகிச் செல்லுவது போல 'இந்த உடல் நான்' என்ற எண்ணத்தையும் இழந்து ஒதுக்க வேண்டும். அதனால் எல்லாவற்றையும் இழக்க நேரினும் சரி.



14. ஒருவன் எப்பொழுதும் பிரம்மத்தையே நினைப்பவனாய், துன்பங்களினின்றும் விடுபட்டு அமைதி அடைவானாகில் அவனுடைய “யான்” “எனது” என்னும் பாவனைகள் தாமாக அழிந்து விடுகின்றன .

15. காணப்படும் பொருள்கள் யாவும் ஒன்றென்பதை உணர்ந்தவன் அமைதியாக -- பதற்ற மின்றிச் சமநிலையில் நான் என்ற எண்ணமற்று வெட்டவெளி போன்று தூயவனாக இருக்கிறான்.

16. உள்ளூர ஒருவன் அமைதியுற்றிருப்பானாகில் உலக முழுதும் அவனுக்கு அமைதியாக இருக்கும். உள்ளூர அவன் பரபரப்புற்றிருந்தால் உலக முழுதும் அவனுக்குத் தீப்பற்றி எரிவது போல் காணப்படும்.

## அதிகாரம் ஆறு

# தன்னைத் தியானித்தல் ஆன்மத் தியானம்

01. இராமா, தூய, களங்கமற்ற, எல்லையற்ற **உணர்வு** நான். நான் மாயைக்கு அப்பாற்பட்டவன். இவ்வுடல் செயலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது அதனை வேறொருவனுடைய உடலென்று நான் கருதுகிறேன்

❖ ஞானிகள் தனது உடம்பைச் சொந்தம் பாராட்டுவதில்லை.



02. இராகவா, மனம், புத்தி, இந்திரியங்கள் யாவும் **உணர்வின்** விளையாட்டுகள். இவையாவும் பொய்யானவை. அகநோக்கு இன்மையால் உள்ளன போலக் காணப்படுகின்றன.

03. நான் வறுமையினால் விடாமலும், வளமுற்றபோது வையகத்தில் யாவர்க்கும் நண்பனாகவும் பிறப்பு இறப்பு என்ற எண்ணங்கள் இன்றியும் இருக்கிறேன். ஆகவே, துன்பங்களினின்று விடுபட்டு வாழ்கிறேன்.

04. நான் செயலற்றவன், நான் ஆசையற்றவன்; தெளிவுள்ள வானம் போன்றவன்; அவாவினின்றும் விடுபட்டவன்; அமைதியானவன்; உருவமற்றவன் நான். நான் என்றென்றும் உள்ளவன்; அசைவில்லாதவன்.



05. பஞ்ச பூதங்களும், மூன்று உலகங்களும், நானும் தூய உணர்வு என்பதனைத் தெளிவாக இப்போது உணர்கிறேன்.

06. இராகவா, நான் எல்லாவற்றுக்கும் அப்பாற் பட்டவன்; நான் எங்கும்முளன்; நான் வெட்டவெளி போன்றவன் எது உள்ளதோ அதுவே நான். இதற்கு மேல் என்னால் வேறொன்றும் கூற இயலாது.

07. நான் எல்லையற்ற உணர்வுக் கடல். பிரபஞ்சம் என்ற கற்பனை அலைகள் என்னில் கிளம்புக அல்லது வீழ்க. என்னிட த்துப் பெருக்கமோ குறுக்கமோ கிடையாது.



08. எல்லையற்ற உணர்வுக் கடலாகிய என்னில் ஜீவர்களாகிய அலைகள் எழுகின்றன. சிறிது நேரம் விளையாடுகின்றன . பின்னர், தத்தம் இயல்புக் கேற்ற வண்ணம் மறைகின்றன. எவ்வளவு வியப்பானவை இந்நிகழ்வுகள்.

09. எனது அறியாமை காரணமாகத் தோற்றம் கொண்டுள்ள உலகம் அவ்வாறே என்னில் கரைந்து விடுகிறது. நான் இப்பொழுது இந்த உலகை உணர்வின் பேரானந்தப் பொருளாக அனுபவிக்கிறேன்.



10. இராமா, என்றென்றும் கட்டற்று உள்ளார்ந்த உணர்வாகிய நான் எனும் ஆன்மாவை, எல்லா உயிர்களிலும் இருக்கின்ற என்னை, நான் விழுந்து வணங்குகிறேன் .

# அதிகாரம் ஏழு

## அகம் (மனம்) தூயதாவது எப்படி?

01. இராகவனே, புறத்தே செயலுள்ளவனாகவும், அகத்தே செயலற்றவனாகவும் இருந்தவாறு நீ உலகில் ஈடுபட்டிருப்பாயாக.

02. இராகவனே, அகத்தேவுள்ள ஆசைகள் அனைத்தையும் துறந்து விடு. பற்றுகளினின்றும், மறைந்துறை பதிவுகளினின்றும் முற்றும் விடுபட்டிரு. வெளிப்பார்வைக்கு வேலை செய்பவனாக உலகியலில் காட்சி கொடு.



03. எண்ணுதற்குரிய பொருள்கள் அனைத்தையும் மனத்தினின்று அகற்றி விடு. அண்டம் அளாவிய பார்வையோடு இரு. தன்னுள் தானாய் நிலைத்திரு. உடம்பொடு வாழும் பொழுதே விடுபெற்றவனாக [ஜீவன் முக்தனாக] இரு. இவ்விதமாக உலக வாழ்வில் ஈடுபடு;

04. நான் ஒரே தூய உணர்வு என்ற உறுதிப்பாட்டில் நிலை நின்று, இருமையாகிய [விருப்பு, வெறுப்பு நன்மை, தீமை, மோட்சம், நரகம் முதலிய] காட்டை எரி; மகிழ்ச்சியாக இரு.

05. 'இந்த உடம்பே நான்' என்ற எண்ணத்தால் எல்லாப் பக்கங்களிலும் இறுகக் கட்டப்பட்டுள்ளாய் நீ. 'நான் பேருணர்வு' என்று அறிவதாகிய ஞான வாளால் அந்தக் கட்டினை வெட்டி விடு. மகிழ்வோடு இரு.

06. பொருளல்லவற்றின் மீதுள்ள பற்றினைக் களை. உலகம் பகுப்பில்லாத முழுமை என்று கருது. கவனத்தை உள்முகமாகத் திருப்பு, உளங் குவித்துத் தூய பேருணர்வாக இரு.

07. உனது உண்மையான இயல்பு. விழிப்பு, கனவு, ஆழ் துயில் என்ற நிலைகளுக்கு அப்பாற்பட்ட, தூய உணர்வு; நீ எப்போதும் அவ்வாறே இரு.

08. தடந்தோள் வீரா, (https://youtu.be/bNwJgN4mmG8) மனக் கருத்தோட்டங்களினின்றும் எப்பொழுதும் விடுபட்டிரு. கரும்பாறையினைப் போல் உறுதியாயிரு. பாறைபோல உணர்ச்சியற்று இல்லாவிடினும் அதைப் போலத் திட்பமுடன் விடுபட்டிரு.

09. இராகவனே, அறிவோன், அறியப்படுவது ஆகிய இருதிறப் பொருளாக இராதே. கருத்தோட்டங்களை விட்டொழி. நீ நீயாக இரு.

10. ஒரு கருத்தோட்டத்தால் இன்னொரு கருத்தோட்டத்தைக் களைத்து விடு. மனத்தை மனத்தால் களைந்து விடு. ஆன்மாவாகிய 'தான்' என்பதில் தங்கி இரு. புனிதனே; இது என்ன அவ்வளவு கடினமா என்ன?

11. கவலைகளால் பழுக்கக் காய்ந்துள இரும்பனைய நின் மனத்தை, ஞான நூல்களைப் பயின்று வெட்டிரும்பு போல் கூர்மை எய்திய மனத்தால் துண்டித்துக் கொள்வாயாக.

12. இராகவனே, உணர்ச்சியற்றதும் ஊமையானதும் ஆனா இந்த உடம்பால் உனக்கு என்ன ஆக வேண்டியிருக்கிறது? இத்தகைய நிலையற்ற உடல் காரணமாக ஏற்படும் இன்ப துன்பங்களால் அனாதைப்போல் துயருறுவானேன்?

13. பேருணர்வு வடிவமாக இருக்கும் உனக்கும் தசை குருதி முதலியவற்றால் ஆன உடம்பிற்கும் எவ்வளவு அகன்று வேறுபாடு இருக்கின்றன! இதை அறிந்த பின்பும் இந்த உடம்பே ஆன்மா என்று கருதுவதை ஏன் விட்டொழியாது இருக்கிறாய்?

14. இந்த யாக்கை (தேகம்) மரக்கட்டை என்று அறியும் அறிவு தான் பரமான்மாவை உணர்தற்கு உதவி செய்யும்.

15. மெய்யான பிரம்மத்தை மக்கள் மறந்து விடுகிறார்கள். எது பொய்யோ அது உண்மையானதாக அவர்களுக்குக் காட்சியளிக்கிறது. இது எவ்வளவு விந்தையானது!



16. மேலான பரம்பொருளை முற்றும் மறந்து விட்டு 'இது என்னுடையது' - 'இது என்னுடையது' என்ற மேலற்ற எண்ணம் அவர்களைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டிருக்கிறது; இதுவும் விநோதமே!

17. இராமா, கண்ணாடி தனக்கு முன்னால் உள்ள பொருள்களைக் காட்டுகிறது. ஆனால் அந்தப் பொருள்களால் அந்தக் கண்ணாடி சிறிதும் பாதிக்கப் பெறுவதில்லை. அவ்வாறே நின் கடமையைச் செய்து வருங்கால் பற்றற்றுச் செய்து வருக!

18. இராமா, எல்லாப் பொருளும் பிரம்மம் என்ற உறுதி, விடுதலைக்கு வழி வகுக்கிறது; ஆகவே, பேதைமையாகிய இருமையை அகற்று. அறவே அகற்று.

# அதிகாரம் எட்டு

## யோகி யாரைக் கும்பிடுகிறான்?

01. இராகவனே, உன்னை நீ உடலிலிருந்து வேறாகப் பிரித்து மெய்யுணர்வில் சுகமாகத் தங்கியிருப்பாயாகில் முழுமுதற் பொருளாகுவாய்; அப்பொழுது மற்றவை யாவும் புல்லெனத் தோன்றும்.

02. இராமா, எதை அறிந்து கொள்வதன் வாயிலாக நீ இந்த உலகத்தை அறிந்து கொள்கிறாயோ, அதை அறிந்து கொண்ட பிறகு உன் மனத்தை உள்முகமாகத் திருப்பு; அப்பொழுது ஆன்மப் பெருஞ்சுடராகிய உன்னைத் தெளிவாகக் காண்பாய்.

03. இராகவா, எதன் துணையால் சுவை, ஒளி, ஓசை, நாற்றம் ஆகியவற்றை அறிகிறாயோ அதுவே உன் ஆன்மா, பரப் பிரம்மம், தேவாதிதேவன் என அறிந்துகொள்.

04. ராமா, உயிர்கள் எதனில் தம் உயிர்ப்பைப் பெறுகின்றனவோ, எது உயிர்களைப் படைக்கின்றதோ, அதுவே நின் உண்மையான ஆன்மா என்று அறிந்து கொள். பொய் என உன் பகுத்தறிவுக்குத் தென்படக் கூடிய யாவற்றையும் ஒதுக்கிய பிறகு எது எஞ்சி இயிருக்கிறதோ அதுவே தூய மெய்யுணர்வு அதுவே நீ என்றுணர்.

05. அறிவு என்பது உன்னை விட்டுப் பிரிந்து தனியே இருக்க வில்லை ; அறியப் படுவது எதுவோ, அதுவும் அறிவை விட்டுத் தனியே இருக்கவில்லை. ஆகவே ஆன்மாவைத் தவிர வேறொன்றும் கிடையாது. அதை விட்டுத் தனித்து எதுவும் கிடையாது.

06. "பிரம்மா விஷ்ணு சிவன் இந்திரன் மற்றும் தேவர்கள் செய்வன எல்லாவற்றையும் செய்பவன் - பேருணர்வின் வடிவாகிய நானே'' - இங்ஙனம் எண்ணுக எண்ணுக !



07. "நானே பிரபஞ்சம் அனைத்தும், நானே அழிவில்லாத மேலாம் ஆன்மா. என்னை வீடுத்து இறந்த காலமோ எதிர் காலமோ கிடையாது" - இங்ஙனம் சிந்தை செய். "யாவும் பிரிக்க முடியாத மாறுதலற்ற ஒரே பிரம்மம்; யாவும் ஒரே தூய உணர்வு யாவும் ஒரே பொது ஆன்மா" - இவ்வாறு சிந்தனை செய்க.

08. "நான் என்பதும் இல்லை; வேறு பொருள் எதுவும் இல்லை. பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்த மயமான பிரம்மம் ஒன்றே" - என்று அமைதியாகத் தியானம் செய்.

09. இராமா, பார்த்தலும் பார்க்கப்படுதலும் ஆகிய அறிவு உடம்பெடுத்த எல்லாச் ஜீவன்களுக்கும் பொதுவானது. ஆனால் யோகி மட்டும் ஒரே ஆன்மாவைத் தொழுகிறான்.

## அதிகாரம் ஒன்பது

### ஆன்மா என்றால் என்ன?

01. இராமா, உடல், புலன்கள் ஆகியவை ஒன்று கூடித் தாமாக இயங்கும் பொழுது 'இது நான்' என்ற எண்ணம் உதிக்கிறது. இது அறியாமை அழுக்கில் தோய்ந்த ஜீவன் ஆகும்

02. எல்லாம் வெளிமயமான பேருணர்வு என்ற எண்ணம் மனத்தில் நிலைத்து நிற்குமாயின், ஜீவன் ஆனது எண்ணெய் தீர்ந்த விளக்குப் போல முடிந்து விடுகிறது.





03. வேதாளம் என்ற ஒன்றைத் தன் மனக் கோலத்தால் உருவாக்கிய குழந்தை அதைத் தன்னினின்றும் வேறாகக் காண்பது போன்று, அறிவற்ற ஜீவன் தன் மயக்க உணர்வால் இந்தப் பொய்யான யாக்கையைப் படைக்கிறது; பிறகு அதைத் தனியான ஒரு பொருளாகக் காண்கிறது.

04. களி மண்ணால் செய்த யானையை உயிருள்ள யானையாகக் கருதிக்கொண்டு சிறு குழந்தை விளையாடுகிறது. அறியாதவர்கள் அவ்வாறே உடலையே ஆன்மா எனக் கருதிச் செயல்களில் ஈடுபடுகிறார்கள்.

05. சித்திரத்தில் காணப்படும் பாம்பை சித்திரப் பாம்பு என்பது உணரும் போது அது யாருக்கும் அச்சம் தருவதில்லை. அது போல ஜீவன் என்ற பாம்பைப் பற்றி நன்கு உணரும் பொழுது துயரமும் இல்லை, துயரத்தின் காரணமும் இல்லை.

06. பூ மாலையைப் பார்த்துப் பாம்பு என நினைக்கையில் பாம்பு அதில் மறைந்து விடுகிறது; அவ்வாறே ஆன்மா வேறு, தான் வேறு என்ற எண்ணம் ஆன்மாவி லிருந்து தோன்றியது ; அது ஆன்மாவிலே மறைகிறது.

07. இராமா, அணிகலன்கள் பலவாக இருப்பினும் பொன்னாக அவை யாவும் ஒன்றே, அவ்வாறே கிளைத்தவை பலவாயினும் ஆன்மா ஒன்றே.

08. உடலின் உறுப்புக்கள் பல: களிமண் கலங்கள் பல; இங்ஙனம் ஒன்றே பலவிதமான அசை பொருள்களாகவும் அசையாப் பொருள்களாகவும் காணப்படுகிறது.

09. ஒரே முகம் பளிங்கு, நீர், நெய், கண்ணாடி ஆகிய பல பொருள்களிலும் பிரதிபலிப்பது போல, ஓரே ஆன்மா பல மனங்களில் அறிவாகப் பிரதிபலிக்கிறது.

10. வானமானது தூசி, புகை, மேகம் முதலியவற்றால் மாசு படுவதாகத் தென்படுகிறது; அது போல மாயையின் தன்மைகளோடு சார்ந்த ஆன்மா அவற்றால் மாசு அடைவது போலக் காணப்படுகிறது.

11. நெருப்பைச் சார்ந்த உலோகம் நெருப்பின் தன்மையை அடைவது போல, ஆன்மாவைச் சார்ந்த புலன்களும் ஆன்மாவின் தன்மையை அடைகின்றன.

12. இராகவா, கண்ணுக்குப் புலப்படாத கிரகணம் நிலவோடு நெருக்கம் கொள்ளும் பொழுது கண்ணுக்குப் புலப்படுகின்றது; அவ்வாறே புலன்களால் அறியப்படும் பொருள்களோடு நெருக்கம் கொள்ளும் பொழுது ஆன்மா அறியப்படுகிறது.





13. நீரும் நெருப்பும் நெருங்கி இணையும் போது ஒன்று, மற்றொன்றின் தன்மையை அடைகின்றது; அவ்வாறே ஆன்மாவாகிய சத்தும். உடலாகிய அசத்தும் கூடும் போது உடல் சத்தாகவும் ஆன்மா அசத்தாகவும் தோன்றுகின்றன.

14. இராகவா, அதிகமான தண்ணீரில் எறியப்பட்ட நெருப்பு தனது தன்மையை இழப்பது போல பொய்ப் பொருள்களோடும் சடப்பொருள்களோடும் உறவாடுகிற உணர்வும் தன்னியல்பை இழந்து சடமானது போல் காணப்படுகிறது.

15. இராமா, கரும்பிலிருந்து வெல்லத்தையும், எள்ளிலிருந்து எண்ணெயையும், கட்டையிலிருந்து நெருப்பையும் கற்களிலிருந்து இரும்பையும் முயன்று பெறுவதைப் போல உடம்பில் உள்ள போதே ஆன்மாவையும் முயன்றுதான் உணர்தல் வேண்டும்.

16. உடைபடாத பளிங்கில் தென்படுகிற வானம் போல, உணர்வின் இயல்பான மகாதேவன் எல்லாப் உயிர்களிலும் காணப்படுகிறான்.



17. பெருமதிப்புள்ள கற்களாலால்கிய குடத்தினுள் வைக்கப்பட்ட விளக்கு தன் ஒளியால் அதன் உள்ளும் புறமும் ஒளிரச் செய்வது போல ஒரே ஆன்மா எல்லாவற்றையும் ஒளிரச் செய்கிறது.

18. கண்ணாடியில் பட்டுத் திரும்பும் கதிரவனொளி மற்றப் பொருள்களையும் விளங்கச் செய்வது போல ஆன்மா தூய அறிவில் பட்டு மற்றப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கிறது.

19. கயிற்றில் அரவுபோல, அதிசயமான இந்தப் பிரபஞ்சம் எதில் தோன்றுகிறதோ அது ஆதாரப் பொருள். அது என்றும் சுடர்கின்ற ஆன்மா.



20. ஆன்மாவுக்குத் தொடக்கமும் இல்லை இறுதியும் இல்லை; அது மாற்றமில்லாதது, என்றும் உள்ளது, உணர்வுமயமானது; அதுவே வெட்டவெளியாகத் தோற்றுகிறது; அதுவே ஜீவனுக்குப் பிறப்பகம்; மேலானவற்றிலும் மேலானது அது.

21. ஆன்மா தூய மெய்யுணர்வானது, என்றும் முளது, எங்கும் இருப்பது, மாறாதது; பகலவனைப் போல ஒளிமயமானது.

22. எங்கும் நிறைந்த ஆன்மா எல்லாவற்றுக்கும் அடிப்படையானது. நெருப்பு வேறு சூடுவேறு அல்லவே, அவ்வாறே பேரொளிப் பிழம்பான மெய்யுணர்வு வேறு ஆன்மா வேறு அல்ல. அதனை அனுபவத்தால் தான் உணர முடியும்.



23. புத்தியாகக் கிளைக்காத உணர்வு ஆகிய பரம ஆன்மா எல்லாவற்றையும் புலப்படுத்துவது, பிரிவற்றது; எல்லாவற்றையும் உள்ளும் புறமும் ஊடுருவிப் பரவியுள்ளது; அதுவே அனைத்துக்கும் உறுதியான ஆதாரமாக உள்ளது.

24. முழு உணர்வே ஆன்மா. தூய அறிவே ஆன்மா. அது அழிவிலாதது; வேண்டுதல் வேண்டாமை என்ற எல்லா எண்ணங்களிலிருந்தும் விடுபட்டது; காலத்தாலும் தேசத்தாலும் இனத்தாலும் கட்டுப்படாதது.

25. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள காற்று எல்லாவற்றுள்ளும் பரவியிருப்பதைப் போல ஆன்மாவாகிய தலைவன் தனக்கென ஓர் உடலில்லாது எங்கும் உள்ளான்.



26. பரந்து விரிந்த புவியில், அணிகலன்களில், ஆகாயத்தில், கதிரவனில், இருக்கின்ற உணர்வானது நிலத்திற்கு அடியில் தம் கூடுகளில் கிடக்கும் புழுக்களிலும் இருக்கின்றது.

27. பந்தம் இல்லை; வீடும் இல்லை. இருமை இல்லை; இரண்டின்மை என்பதில்லை. பிரம்மம் ஒன்றே யாண்டும் மெய்யுணர்வாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

28. இராமா, அறிவே பிரம்மம், இந்த உலகம் பிரம்மம். பலவகை மூலக் கூறுகள் பிரம்மம். நானே பிரம்மம்; என் பகைவனும் பிரம்மம். என் கேளும் கிளையும் (நட்பும் , உறவும்) பிரம்மம்.

29. உணர்வானது, உணரப்படும் பொருள் என்ற கருத்தே பந்தமாகும். அதிலிருந்து விடுபடுவதே விடுதலை, முக்தி. உணர்வும் உணரப்படும் பொருளும் மற்ற யாவும் ஆன்மாவே. இதுவே மெய் யுணர்வுக் கொள்கைகள் அனைத்தின் சாரமும் ஆகும்.





30. இங்கே உள்ளது உணர்வு ஒன்றே. இப் பிரபஞ்சம் உணர்வின்றி மற்றில்லை. நீயும் உணர்வு, நானும் உணர்வு; பிரபஞ்சம் எல்லாம் உணர்வு; இதுவே முடிந்த முடிவு.

31. இருப்பதும் ஒளிர்வதும் யாதும் ஆன்மாவே, அது தவிர ஒளிர்வதாகத் தெரிவனயாவும் உண்மையில் இல்லை. உணர்வு ஒன்றே, தானாக, சுயம்புவாகச் சுடர்வது. தெரிபவர் தெரிவன பற்றிய எண்ணங்கள் பயனற்ற அனுமானங்களே.

## அதிகாரம் பத்து

# விடுதலை

01. புலன்கள் தமக்கு இதம் அளிக்கும் பொருள்களோடு தொடர்பு கொள்ளுவதன் மூலம் மேலான பேரின்பத்தைத் துய்க்க முடியாது. ஒருமுகமான ஆன்ம ஆய்வினல் மனம் சாகடிக்கப் படுவதே விழுமிய (சிறந்த) நிலையாகும்.

02. இராகவா, புலன்களானவை (சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்கள்) தமக்குரிய பொருள்களேடு உறவு கொள்ளுதலின் மூலம் ஏற்படுகிற இன்பம் தாழ்வானது; புலனுகர்வுப் பொருள்களின் தொடர்பே பந்தம், அதிலிருந்து விடுபடுவதே விடுதலை.



03. இராமா, இருத்தல், இல்லா திருத்தல், என்பவற்றுக்கு இடையிலான தூய நிலையை எய்துக. அகவுலகாயினும் சரி, புற வுலகாயினும் சரி, அதனை ஏற்காதே, விலக்காதே.

04. இராகவா, அதையே எப்போதும் நம்பியிரு. அது எல்லையற்ற பரவெளி போன்ற இதய மாகும். உணர்ச்சியுண்மை, உணர்ச்சியின்மை ஆகியவற்றுக்கு இடைப்பட்ட நிலையே உண்மையான நித்தியப் பொருள்.

05. அறிபவன், அறியப்படுவது என்பன இருப்பதாக நம்பிக்கை கொள்வது பந்தம் எனப்படும். அறிபவன் அறியப்படும் பொருளால் பிணைப்புறுகின்றான். அறிய வேண்டுவது எதுவுமில்லை என்ற நிலையில் அவன் விடுதலை பெறுகிறான்.

06. இராகவா, காண்பார், காணப்படுவது, காணல் என்ற எண்ணங்களை அவற்றுக்கு அடிப்படையாக அமைந்து கிடக்கும் சென்ற காலத்துச் சுவடுகள் (வாசனைகள்) என்பவற்றுடன் புறக்கணித்து விட்டு நாம் ஆன்மாவைத் தியானிப்போம். அஃதே ஆதிச் சுடரொளி. அதுவே காட்சிக்கு அடிப்படை.

07. இருத்தல் இல்லாதிருத்தல் ஆகியவற்றுக்கு இடையிலானதும் ஒளிகளுக் கெல்லாம் ஒளியும் ஆன நித்தியமான ஆன்மாவை நாம் தியானம் செய்கிறோம்.

08. நமது எல்லா எண்ணங்களுக்கும் பலனளிப்பவர், ஒளிப்பொருள்கள் அத்தனைக்கும் ஒளி அளிப்பவர், எல்லாப் பொருள்களுக்கும் ஆகத்தீர்த்த வரம்பாக இருப்பவர், உணர்வு என்னும் ஆன்மா ஆகிய தன்னைத் தியானம் செய்கிறோம்.

09. பார்ப்பவனுக்கும் பார்க்கப்படும் பொருளுக்கும் இடையே ஏற்படுகின்ற அணுக்கத் (நெருக்கம்) தொடர்பினால் மனத்தில் எழும் இன்பமே நமது மெய்த்தன்மை; அதாவது மாறுதலற்ற ஆன்மா. அதை நாம் தியானம் செய்கிறோம்.

10. விழிப்பு நிலையின் முடிவிலும், உறக்க நிலையின் தொடக்கத்திலும் ஏற்படுகிற நிலையை ஒருவன் இடையறாது நினைப்பின் அவன் அக்கணமே அழிவற்ற ஆனந்தத்தை எய்தக் கூடும்.



11. எந்த நிலை எண்ணங்களெல்லாம் அமைதியுறுகின்றனவோ எந்த நிலை விழிப்புக்கும் கனவுக்கும் வேறுபட்டிருக்கின்றதோ அத்தகைய, பாறைபோன்ற, திட்ப நிலையே ஒருவனின் மேலாம் நிலையாகும்.

12. 'உண்மை – உணர்வு - ஆனந்தம்" ஆகிய தேவ தேவன் மண் குடத்திலிருக்கின்ற மண்ணைப் போல எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான்.

13. இராகவா, எண்ணங்களால் அலைப்புறுகின்ற எல்லையற்ற உணார்வுக் கடலாகிய ஆன்மா தன் ஒளி வீசித் திகழ்கின்றது.

14. கடல் என்பது நீர் அன்றி வேறின்மை போல பொருள் மலிந்த இவ்வுலகம் உணர்வு அன்றி வேறொன்று இல்லை. வரம்பிகந்த வெளிபோன்று அஃது எங்கும் நிறைந்திருக்கின் றது.

15. இராகவனே, கண்ணுக்குப் புலனாகாது இருப்பதிலும், எங்கும் பரவி இருப்பதிலும், அழிக்க முடியாத் தன்மையிலும் பிரம்மமும் பரவெளியும் ஒன்றுதான். ஆனால், பிரம்மமோ உணர்வு மயமானது.

16. இராமா, அலைகளற்ற. ஆழமுள்ள, தூய அமுதக் கடல் ஒன்றே ஒன்றுதான் உளது; அஃது! யாண்டும் இனியது, யாண்டும் இனியது.

17. இவை யாவும் உண்மையிலே பிரம்மம் தான்: இவை யாவும் ஆன்மா, "நான் ஒரு பொருள், இது வேறொரு பொருள்" என்று பிரம்மத்தைத் துண்டு துண்டாக்காதே.

18. பிரம்மம் எங்கும் பரவியுள்ளது, பிரிவற்றது என்று உணருங்கால் இந்த பரந்த உலகியற்பற்றான இகவாழ்க்கை அல்லது இல்லற வாழ்கை (சம்சார பந்தம்) மேலாம். அது இறைவனாகவே காணப்படுகிறது.

19. எல்லாம் பிரம்மம் என்பதை உ ணருங்கால் ஒருவன் உண்மையாகவே தானும் பிரம்மம் ஆகிருன். அமுதத்தை அருந்தும் எவன் தான் அமரனாக மாட்டான்?



20. ராமா, நீ அறிவுள்ளவனாக இருப்பாயாகில் இத்தகைய உறுதியினால் நீயும் பிரம்மம் ஆகுவாய். அங்ஙனம்: இல்லையாகில் உனக்குத் திரும்பத் திரும்ப உரைத்தாலும் சாம்பல் மீது எறியப்பெற்ற படையல்கள் போல அவ்வறிவுரை வீணாய் முடியும்.

21. ராமா, உண்மையை அறிந்திருப்பினும் நீ மீண்டும் மீண்டும் பயில்தல் வேண்டும். கடக விதை (தேற்றாங் கொட்டை) என்று வாயாற் சொல்லுவதனால் மட்டும் தண்ணீர் தெளிவடைந்து விடாது.

22. இராகவா, நான் தான் மேலான ஆன்மா, வாசுதேவன் என்னும் எண்ணம் ஒருவனுடைய மனத்தில் நிலை நிற்குமானால் அவன் விடுதலை அடைகிறான்; இன்றேல் கட்டுண்டு கிடைக்கிறான்.



23. 'இராகவா, 'இது வன்று', 'இது வன்று' என்று எல்லாவற்றையும் விலக்கிய பிறகு அவ்வாறு விலக்கப்பட முடியாது எஞ்சி நிற்பது மேலாம் இறையே. அது நான் என்று நினைத்து மகிழ்ந்திரு.

24. ரகுராமா, 'நான் தான் பிரம்மம்' என்பதை எப்பொழுதும் அறிந்துகொள். அது ஒன்றாக, முழுமையாக, இருக்கின்றது. பிரிக்க இயலாத அந்தப் பொருளை -- 'நான் தியானிப்பவன், அது தியானப் பொருள்' என்று எவ்வாறு பிரிக்க இயலும்?



25. நான் தூய உணர்வு என்பதைச் சிந்திக்கும் பொழுது அது தியானம் எனப்படும்; தியானம் என்ற எண்ணத்தையும் மறந்த நிலையில் அது சமாதி எனப்படுகிறது.

26. ஞான நெறியிற் கடுமையான பயிற்சி காரணமாக 'நான்' எனும் எண்ணம் அறவே நீங்கி, பிரம்மத்தைப் பற்றிய எண்ணங்கள் ஒருவனுடைய உள்ளத்தில் எக்காலமும் பாய்ந்தோடிச் கொண்டு இருக்குமானால் அந்த நிலைக்கு எண்ணங்களற்ற தியானம் (சாம்பிரக்ஞுயாதா சமாதி) என்று பெயர்.



27. யுகங்களின் முடிவில் தோன்றும் ஊழிக் காற்று வீசினும் வீசுக; கடல்கள் யாவும் ஒன்று படினும் படுக; பன்னிரு பகலவரும் ஒருங்கு சேர்ந்து காயினும் காய்க; எவ்வாறாயினும் மனமிறந்த நிலை எய்தப் பெற்றானுக்கு எவ்வித இடுக்கணும் வராது.

28. எல்லா உயிர்களின் தோற்றத்திற்கும் மறைப்பிற்கும் சாட்சியாக இருக்கின்ற உணர்வு எதுவோ, அதுவே, விழுமிய ஆனந்தமான அமரநிலை என்றுணருக.

29. அசையும் பொருள் அசையாப் பொருள் எதுவாக இருப்பினும் அது மனத்தின் கற்பிதமே. மனம் அழிக்கப்பட்ட நிலையில் இருமையோ பன்மையோ காணப்படுவதில்லை.

30. ராமா, எது மாறுதலற்றதோ, எது நலம் தருவதோ, எது அமைதியானதோ எதனில் இவ்வுலகம் தங்கியுள்ளதோ எது மாறும் பொருள்களாகவும் மாறாப் பொருள்களாகவும் வெளிப்படுகின்றதோ அதுவே, ஒன்றே ஒன்றான உணர்வு ஆகும்.

31. பாம்பு தன் தோலை உரிப்பதற்கு முன்பு அத் தோலையும் தான் என்றே கருதுகிறது. தன் தோலைத் தனது புற்றில் உரித்த பிறகு அதனைத் தான் என்று அது கருதுவதில்லை .

32. இராமா, நன்மை தீமை ஆகிய இரண்டையும் கடந்த ஒருவன் சின்ன குழந்தை போலாகிறான். பாவகாரியம் என்று விலக்கப்பட்டதை அவன் செய்யாதிருப்பதில்லை. தகுதி என்பதற்காக, விதிக்கப் பட்டதை அவன் செய்வதும் மில்லை.

- பாவ புண்ணிய வரையறைக்கு அவன் உட்பட்டதில்லை

33. இராமா, சிலை ஒன்று தூணிலேயே செதுக்கப்பட்டிருத்தல் போல இந்த உலகம் பிரம்மத்தில் தங்கி இருக்கின்றது. ஆகவே அந்தப் பரநிலை சூனிய நிலையில்லை. பிரம்மமும் வெறுவெளி எனப்படுகிறது.

34. சிலை எதுவும் இல்லாத போது அது சிலையற்ற தூண் என்று சொல்லப்படுவது போல் உலகம் என்ற தடம் இல்லாத போது பிரம்மமும் வெறுவெளி எனப்படுகிறது.

35. நீரின் மேற்பரப்பு அலைகளோ டிருக்கலாம். அலைகள் இல்லாமலும் இருக்கலாம், அதே போன்று பிரம்மமும் உலகத்தை கொண்டிருக்கலாம் கொள்ளாமலும் இருக்கலாம் அது இன்மையும் இல்லை; இருத்தலும் இல்லை.



## வசிட்டரின் அறிவுரை.

'ஒவ்வொன்றும் மாறுகிறது, ஒவ்வொன்றும் நிலையற்று இருக்கிறது என யாரும் அறிந்தவை ஒன்று. 'மாறாதன என்று நாம் கருதும் பரிதியும் விண்மீன்களும், கோள்களும் மாறிவருகின்றன' என நாம் காண்கின்றோம். நில்லாதவற்றுள் நிலையானது, நம்மை விட்டுப் பிரியாதது , என்றென்றும் அறிவும் அமைதியும் தருவது இன்பமே இயல்பானது - அது இன்னது என்று உணர்த்துகிறது.